REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: பங்குனி 22உ புதன் (4—4—56) ★ ★ வெளியூர்: பங்குனி 23உ வியாழன் (5—4—56) [இதழ் 250

## 5 இலட்சம் 'டிக்கெட்' இல்லாப் பிரயாணிகள்

பாட்னு, ஏப். 3—

வடகிழக்கு இரயில்வேயில் 1955 ஏப்ரல்—டிசம்பர் இடையே 'டிக்கெட்' இன்றியும், சரியான 'டிக்கெட்' இல்லாமலும் பிரயாணம் செய்ததாக சுமார் 5 இலட்சம் பேர் பிடிக்கப்பட்டிருக்கின்றனராம்.

# டெல்லிப் பெரிய மனிதர்களைச் சாடுகிருர்

# அனுமந்தையா!

## மாநிலப் புது அமைப்புக் குழுவின் தகுதியின்மை!

### 'நிர்வாக அனுபவமற்ரேர்; மக்கள் உணர்ச்சிகளை உணராதோர்'

### மைசூர் சட்ட சபையில் இடித்துரை

*தட்சிணப் பிரதேச யோசனை உடனடியாக அமுல் செய்ய முடியாதது!*

பெங்களூர், ஏப். 3—

"மாநிலப் புது அமைப்புக் குழுவில் நிர்வாகத் திறனும், அனுபவமும் கொண்டவர்களும், மக்களின் உணர்ச்சிகளை அறிந்தவர்களும் இடம் பெற்றிருக்க வேண்டும்; ஆனல், குழுவில் இருந்த மூவருக்கும் நிர்வாக அனுபவமும் கிடையாது; அவர்கள் மக்களின் தலைவர்களாயுமில்லை. அவர்கள் ஏதேனும் தவறிழைத்திருப்பார்களேயானல் அதற்குக் காரணம், அவர்களிடமுள்ள இந்தக் குறைபாடுகள்தான்.

"அவர்களது அறிக்கைக்கு நான் ஏதும் உள்நோக்கம் கற்பிப்பதாகக் கருதக்கூடாது. ஆனல், அவர்கள் மூவரும், இந்த மாநிலப் புது அமைப்பு விவகாரத்தைத் திருப்திகரமாகத் தீர்த்து வைப்பதற்குரிய வகையான நபர்கள் அல்ல.

"துவக்கத்திலேயே நாம் இழைத்த தவறின் விளைவாக, இப்போது, புயலின் விளைவுகள் எனப்படுபவற்றை நாம் அனுபவித்துக்கொண்டிருக்கிரேம்.

"இது நமக்கும் இந்திய மக்களுக்கும் ஒரு மகத்தான படிப்பினையாகும். இம்மாதிரி முக்கியமான காரியங்களுக்கு நாம் நபர்களைப் பொறுக்கும்போது அந்த நபர்களின் யோக்கியதாம்சங்களை நாம் கணக்கெடுத்தாக வேண்டும்"

*—என்று, மைசூர் முதன் மந்திரி அனுமந்தையா, மைசூர் சட்ட சபையில் மாநிலப் புது அமைப்பு மசோதா பற்றிய தீர்மானத்தைக் கொண்டுவந்து பேசுகையில் குறிப்பிட்டிருக்கிருர்.*

*மேலும் அவர் குறிப்பிட்டதாவது:—*

*"தட்சிணப் பிரதேசம் அமைக்க வேண்டும் என்ற யோசனைக்கு அங்கீகாரம் தருமாறு கோருகிறேன். அப்படிக் கோரும்போது, அந்த யோசனை உடனடியாக அமுல் செய்யக்கூடிய ஒன்று என எண்ணுவது சாத்தியமில்லை என்பதையும் நான் உணர்ந்திருக்கிறேன்.*

*"சென்னை மக்கள் அந்த யோசனையை ஏற்க இன்னும் தயாராக இல்லை என்பதை நான் ஏற்கனவே கூறியிருக்கிறேன்.*

*"திட்டமான முடிவேதும் அறிவிக்க முடியாத அரசியல் நிலையில், துரதிருஷ்டவசமாகக் கோள மக்கள் வைக்கப்பட்டிருக்கின்றனர்.*

*'ஆந்திர மக்களோ, தங்களுக்கென கிடைத்துள்ள மாநிலத்தைக் கொண்டு திருப்தி அடைபவர்களாயுள்ளனர்.*

*"இந்த மூன்று மாநிலங்களும், இந்த யோசனைக்குத் திட்டமான ஆதரவு தெரிவிக்கவில்லை.*

*"இந்த மூன்று மாநில மக்களும், திட்டவட்டமாக இந்த யோசனையை எதிர்க்கிருர்கள் என்ருல், நான் யோசனையை ஏற்குமாறு வற்புறுத்தமாட்டேன். யோசனையை ஏற்குமாறு எவரையும் நாம் கேட்கத் தேவையில்லை; இதற்காகப் பிரச்சாரம் செய்யத் தேவை இல்லை.*

*"என்ருவது ஒரு நாள்—எப்போதென்று எனக்குத் தெரியாது—அந்த மூன்று மாநிலத்தவரும், மைசூர் மாநிலத்தவரும், பெரிய மாநிலங்களாக உருப்பெற வேண்டுமென எண்ணுவரேல், எல்லோரும் ஒன்ருக இணைந்தோ, அல்லது, தனித் தனியாக ஒருவருக்கொருவர் இணைந்தோ, மக்கள் விரும்பினல், பெரிய மாநிலங்களாக உருப் பெறலாம். எனவே, மைசூர் மக்களாகிய நாம், திறந்த மனதோடு இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்."*

*மேலும், அனுமந்தையா, தொடர்ந்து குறிப்பிட்டதாவது:—*

*"காற்றடிக்கும் பக்கம் சாய்வதைவிட அரசியலில் சுலபமானது எதுவும் இல்லை. வேறு பலரைக் காட்டிலும், நான்*

(4-ம் பக்கம் பார்க்க)

## 'கசப்பை வளர்க்கவே உதவும்'

### பிரதேசக் கோரிக்கை பற்றி மைசூர் முதலமைச்சர்

*பெங்களூர், ஏப். 3—*

*"மைசூருடன் இணைக்கப்பட வேண்டும் என்று பிரதேசங்களைக் கோருவது சர்க்காரின் கொள்கையாக இருக்கவில்லை; இம்மாதிரி பிரதேசங்களைக் கோருவதும், அதற்குப் பிறர் மறுப்புக் கோரிக்கை தெரிவிப்பதும், பரஸ்பரம் கசப்பை வளர்க்கவே உதவும்" என்று, மைசூர் முதன் மந்திரி அனுமந்தையா சட்டசபையில் தெரிவித்திருக்கிருர்.*

## கைத்தறித் துணிக்குத் 'தள்ளுபடி'

### மேலும் ஓராண்டு நீடிக்கும்

*திருவனந்தபுரம், ஏப். 3—*

*கைத்தறித் துணி விற்பனையில் தள்ளுபடி ('ரிபேட்'). அளிக்கும் சலுகையை ஏப்ரல் திங்கள் 1-ந் தேதியிலிருந்து மேலும் ஓராண்டிற்கு இந்தியப் பேரரசினர் நீடித்திருக்கின்றனர்.*

## மண்டலக் குழு அமைப்பு

### ஆந்திர கம்யூனிஸ்டுகள் எதிர்ப்பு

மண்டலக் குழுக்கள் அமைப்பதற்கு, ஆந்திர கம்யூனிஸ்டு கட்சியினர் எதிர்ப்புத் தெரிவித்திருக்கின்றனர்.

*மாநில புது அமைப்பு மசோதா ஆந்திர சட்டசபையின் விவாதத்திற்கு உட்பட்டபோது, எதிர்க்கட்சித் தலைவரான பி. சுந்தரய்யா, மண்டலக் குழு அமைக்கும் திட்டத்தை எதிர்த்துப் பேசியிருக்கிருர்.*

*"மண்டலக் குழுக்கள் என்பவை, நாளாவட்டத்தில் மண்டல சர்க்கார்களாக உருமாறி, மொழிவழி மாநிலங்களின் ஒற்றுமையை அழித்துவிடும்,"*

*என்று, அவர் தெரிவித்திருக்கிருர்.*

*"மண்டலக் குழுக்கள் நிறுவுவது, சில பிரதேசங்களில் பொது கவர்னர், பொது உயர் நீதிமன்றங்கள் நியமிப்பது ஆகியவை பற்றிய மசோதாவின் அம்சங்கள் எல்லாம், ஆந்திரரின் கனவான 'விசால ஆந்திரத்'தின் அமைப்பையே உரு மாற்றிவிடும்,"*

*என்றும் சுந்தரய்யா எடுத்துரைத்திருக்கிருர்.*

*"தெலுங்கானவிற்கு வேண்டுமானல், ஒரு வட்டாரக் குழு அமைத்துக்கொள்ளுங்கள்; ஆனல், அந்தக் குழுமீது சர்க்கார் அதிகாரம் செலுத்துவதாக இருக்கக்கூடாது" என்றும் சுந்தரய்யா தெரிவித்திருக்கிருர்.*

சென்னை, மைசூர், ஒரிசா, மத்தியப் பிரதேசம், மராட்டியத்திற்கும், கர்நாடகத்திற்கும் பிரித்துத் தரப்படும் ஐதராபாத் பகுதிகள், இங்கெல்லாம் உள்ள தெலுங்கு பேசும் மக்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்க, அக்டோபர் திங்களுக்குள் ஒரு எல்லைக் குழு நியமிக்க வேண்டும்,"

*என்றும், தோழர் சுந்தரய்யா, சர்க்காரைக் கோரியிருக்கிருர்.*

# ஆச்சாரியாரின் இழிகுணம்

## டாக்டர் இலட்சுமணசாமி கண்டனம்

### அர்த்தால் வெற்றிக்கு அரசாங்கம் துணைபுரிந்தது என்ற கூற்று நியாயமாகுமா?

### சென்னை மக்களுக்கு மலையாளி எதிர்ப்பு உணர்வு உண்டென்பது சரியாகுமா?

மேல் (சட்ட) சபையில் இடித்துரை

சென்னை, மார்ச் 3—

"துவக்கக் காலத்திலிருந்தே மாநிலங்களையெல்லாம் மொழிவாரி அடிப்படையில் பிரிக்க வேண்டுமென்ற கொள்கையை எதிர்த்துவந்திருப்பவன் நான் ஒருவன்தான் மாநிலங்களைத் திருத்தி அமைக்க வேண்டும் என்று 1947 அக்டோபரில் டி. எஸ். எஸ். இராசன் தீர்மானம் கொண்டுவந்தபோதே, மாநிலங்களை மொழிவாரி அடிப்படையில் பிரிப்பதாக இருந்தால் ஒவ்வொரு மாவட்டத்தையும், நகரத்தையும்கூடப் பிரித்துவிட வேண்டிய நிலை ஏற்பட்டுவிடும் என்று கூறினது நான்தான். அந்தச் சமயத்திலேயே நான், இம்மாதிரிப் பிரிவினைகள் செய்வதானது, இமய மலையைப்போன்ற பெரிய தவருகும் என்று சுட்டிக்காட்டியிருக்கிறேன்.'

—இவ்வாறு, சென்னை மேல் (சட்ட) சபையில், மாநிலத் திருத்த அமைப்புக் குறித்த மசோதாமீது நடைபெற்ற விவாதத்தின்போது பேசுகையில் டாக்டர் இலட்சுமணசாமி அவர்கள் குறிப்பிட்டிருக்கிருர்.

*முன்தினம் சபையில் ஆச்சாரியார் அவர்கள் பேசியிருப்பது குறித்து அவர் மேலும் கூறினர்:—*

*"நேற்று சபையில் பேசிய ராஜாஜி அவர்கள், தமது 'தன்மானமிக்க கடமை'யை மறந்து பேசியிருக்கிருர். ஆனல் சென்ற 1955 நவம்பரில் பிரச்சினையில் ஒரு நிலையான முடிவை இந்திய சர்க்கார் மேற்கொள்ளா முன்னர், மாநிலக் குழுவின் சிபாரிசுகளை சபை விவாதித்தபோது, அவருடைய கருத்தை சபை அறிந்துகொள்ள முடியாமல் போயிற்று. என் அந்தச் சமயத்திலேயே ஆச்சாரியார் அவர்கள் இந்தச் சபை மேற்கொள்ளவேண்டிய சரியான வழிகளைக் கூறியிருக்கக் கூடாதா? அவர் அப்படிச் செய்யவிடாதபடி அவரைத் தடுத்தது எது?"*

*"மொழிவாரி மாநிலங்களை அமைக்கும்போது, நாடு துண்டாடப்படுகிறது என்று கூறுவதானது வரவேற்கக் கூடாதது; 'துண்டாடுதல்' என்ற சொல்லுக்குப் பொருள் கூறுவதானல், மாநிலங்களைப் புனரமைப்புச் செய்யவேண்டும் என்று கருதுகிற யாருக்குமே தோன்றக்கூடிய கடைசி முடிவு என்று கொள்ளலாம். மாநிலங்கள் ஒன்றுக்கொன்று எதிர் எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடாமல், ஒன்றுக்கொன்று கூட்டு மனப்பான்மை வளர்த்து கூட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்பதுதான் வரவேற்க வேண்டியது.*

*"சென்னை மாநிலம் ஒரு வகையில் பிறரால் ஒதுக்கி வைக்கப்படுகிற ஒருவனைப்போல் இருக்கிறது. ஆந்திரரும், மலபார் மக்களும் சென்னையை விட்டுப் பிரிந்து செல்ல வேண்டுமென்று கோரினதைப் போலவே பிரிந்துவிட்டனர். ஒதுக்கி வைக்கப்பட்ட நிலையிலுள்ள இந்தச் சென்னை மாநிலம் சிற்சில சமயங்களில், மற்றவர்களுடன் சில பல இடங்களில் ஏதேனும் ஒப்பந்தங்கள் செய்துகொள்ளக்கூட முடியாத நிலையில் இருந்துவருகிறது. மற்ற எந்த மாநிலங்களையும்விட இந்த ஒரு மாநிலத்தில் மட்டுமேதான், ஒரு*

(4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

நம் நாடு
தி.மு.க. தினஇதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 4-4-'56 புதன்

# சிறு தூசையும் அசைக்காது!

'இராஜஸ்தான் இராஜ்யப் படைக்கு ஜெயப்பூரில் ஒரு நினைவுச் சின்னம் நிறுவும் முயற்சி கேட்டு மகிழ்கிறேன். இந்திய வரலாற்றில் குறிப்பிடத்தகுந்தப் பணியாற்றிய பழைய இராஜபுத்திர சேனையின் வழித் தோன்றலாக, ஒருவகையில் இந்த இராஜ்யப் படை இருக்கிறது. வரலாறும், அதை உள்ளடக்கி எழுந்த காதைகளும், அதன் சிறப்பான வீரத்தைப் பேசுகின்றன. சென்ற சில நூறு ஆண்டுகளாக அவர்கள் புரிந்துள்ளதாகக் கூறப்படும் செயற்கரும் செயல்களும் நமது தேசீய பரம்பரைச் செல்வமாகும்."

இப்பாராட்டுரையை, சென்னை சட்டசபையில் நீதிக் கட்சியின் ஒரே பிரதிநிதியாக வீற்றிருக்கும் திரு. பொன்னம்பலத் தியாகராசன் அவர்கள் அனுப்பவில்லை—ஆனல், ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடினவர்கள் எனப் பெருமிதத்துடன் பாராட்டிக் கூறிக்கொள்ளும், இந்தியப் பிரதமர் ஜவகர்லால் நேரு அவர்கள்தான், உள்ளப் பூரிப்புடன் அனுப்பி இருக்கிறார்.

அப்பாராட்டுரையைப் பெறக் காத்துக்கொண்டிருப்பவரும், இந்தியப்பிரதமரைப்போன்றே, ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்த்து விடுதலைப் போர் பல கண்ட நமது நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்களைப் போன்ற காந்தியப் போர்வீரர் அணிவகுப்பைச் சேர்ந்தவர் எனக் கருதிவிட வேண்டாம்.

ஏகாதிபத்தியத்திடம் சரணாகதி அடைந்து, தம் கொடியும், கொற்றமும், மணி முடியும், இராஜாதிராஜன் என்றப் பட்டப் பெயரும் பாதுகாக்கப்பட்டால் போதுமெனத் திருப்தி கண்டு மகிழ்ந்தும், காந்திய விடுதலை அணிவகுப்பை அடக்குமுறை பல கொண்டு சீரழித்தும்; இத் துணைக்கண்டம் விடுபட்ட பிறகு காங்கிரஸ் ஆட்சிக்குப் பராக்குக் கூறிக்கொண்டும், சொகுசான வாழ்வு வாழ்ந்து உல்லாசபுரியில் உலாவிக் கொண்டுவரும் இராஜஸ்தான் இராஜப்பிரமுகருக்கு, இந்தியப் பிரதமர் நேரு விடுத்துள்ள, மகிழ்ச்சி பொங்கிய பாராட்டு முடங்கல் ஆகும்.

ஜெயப்பூரில், இராஜஸ்தான் இராஜ்யப் படையின் நினைவாக, நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டு இருக்கிறது. அதன் சேவை, நிதி அமைச்சரின் கூற்றுப்படி, நாட்டின் விடுதலைக்குப் போராடிய நிதி மந்திரி வகையறுக்களை நடுத் தெருவில் சுட்டு வீழ்த்துவதாக இருந்திருக்கிறது.

அதுவுமன்றி, எந்த உலகப் பெரும் போரில், ஆங்கில ஏகாதிபத்தியம் உள்ளிட்ட நேச நாடுகளுக்கு நாட்டு மக்களின் உதவியைத் திரட்டித் தருவதில் ஈடுபட்டதே மாபெரும் தேசத் துரோகம்; அத் துரோகச் செயலை மேற்கொண்டு இருந்தவர்கள் வேறு நாடுகளில் இருந்திருப்பார்களானல், அவர்கள் இதற்குள்ளாகச் சுட்டு வீழ்த்தப்பட்டிருப்பார்கள் என நிதி அமைச்சர் நிந்தனை நிகண்டு பாடுகிறாரே, அதே தேசத் துரோகத்தை வெளிநாட்டுப் போர்க்களங்களில் நேச நாடுகளுக்குத் துணையாகப் போரிடுவதின் மூலம், திறம்படச் செயலாற்றிய இராஜஸ்தான் இராஜ்யப் படைக்கு நினைவுச் சின்னம் எழுப்பப்படும் விழாவிற்குத்தான், இந்தியப் பிரதமர் நேரு பெருமகிழ்வுடன் வாழ்த்து அனுப்பி இருக்கிறார்.

தம்மால் கொள்ளப்பட்ட குருநாதரும், தம்மாலேயே சிறப்பித்துப் பாராட்டப்பெறத் தகுதிவாய்ந்தத் தலைவரும், ஏகாதிபத்தியத்திற்கு ஏவல் செய்து கிடப்பதே ஏற்றந்தரக்கூடியது எனத் தீர்மானித்துக் கிடந்த இராஜஸ்தான் இராஜ்யப் படைக்கு நினைவுச் சின்னம் எழுப்புவதைப் பாராட்டுகிறார். ஆனல், சீடரான நிதி அமைச்சரோ, நேச நாடுகளின் போர் முயற்சிக்கு உதவி தேடித் தந்தவர்களைத் தூற்றுகிறார்—வேறு நாடாக இருந்தால் அவர்கள் தூக்கிலிடப்பட்டு இருப்பர் எனக் கூறி, தம் கட்சியின் தாராள புத்தியையும், அல்லவை மறந்து நடக்கும் அருங்குணத்தையும் விளம்பரப்படுத்த முயலுகிறார்!

இந்தியத் துணைக்கண்டத்துக்கு வெளியில், ஆப்ரிக்க வட கடலோரத்திலும், மத்திய தரைக் கடல் பகுதியின் சுடு மணல் பரப்பிலும், வீரப் போரிட்ட நம் இந்தியத் துணைக் கண்டத்துப் படையின் வீரச் செயலின் நுனியில் அல்லவா, இந்திய அரசியல் விடுதலை அக்காலத்தில் தொங்கிக்கொண்டிருந்தது? பாசீச வெறியர்களைச் சிதறடித்த அப்படையைத் தானே, 'சோற்றுப் படை' என, வாய் கூசாது, விஜயலட்சுமி அம்மையார் அக்காலத்தில் அர்ச்சித்தார்கள்? பின்னர், அவர்களே, முன்னுள் தூற்றியதற்கு மாருக, அப்படையின் பாலைவனப் போர்த் திறத்தைப் பாராட்டாமலா இருந்தார்கள்?

பதவியாண்டியான நிதி அமைச்சர், உலகப் பெரும் போரின் உள்ளடக்கத்தை விளக்கமாகத் தெரிந்தவராக இருப்பார் என, எப்படி நாம் கருதமுடியும்? நாஜீச—பாசீச வெறியர்கள் வெற்றிபெற்றிருப்பார்களேயானல், முதலில் நிதி அமைச்சர் போன்றவர்களுக்கு முடிவேற்பட்டு இருப்பதுடன், இந்தியத் துணைக்கண்டத்தின் அரசியல் விடுதலைக்கும் முற்றுப்புள்ளி அல்லவா வைக்கப்பட்டுவிட்டு இருக்கும்? 'ஆங்கிலேயர் அகன்றனர்; ஜப்பானியர் நாடாளுகின்றனர்' என்ற புதிய அடிமை முத்திரை அல்லவா பொறிக்கப்பட்டு இருந்திருக்கும்? நிற்க,

இராஜஸ்தான் இராஜ்ய சேனை, சென்ற பெரும் போரில் செய்த சேவையை என்றென்றும் மக்கள் கருத்திலிருந்து மறைந்துவிடாமல் இருப்பதற்காகவே, ஜெயப்பூரில் நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டு இருக்கிறது. அச்சேதியை அறிவித்து ஆசி வழங்கக் கோரிய, ஏகாதிபத்திய எஃகுத் தூணாக இருந்த இராஜஸ்தான் இராஜப் பிரமுகருக்கு, படையின் பராக்கிரம சேவையை வாழ்த்திப் பாராட்டுச் செய்தி அனுப்புகிறார், இந்தியப் பிரதமர்!

இங்கோ, அவரின் சீடர் எனப் பீத்திக்கொள்ளும் நிதி அமைச்சர், சென்னை சட்ட சபையில், அக்காலத்தில் போர்ப் பிரசாரத்தில் ஈடுபட்டக் குற்றத்துக்காக, பொன்னம்பலத் தியாகராசன் அவர்கள்மீது சொல் அம்புகளை வீசி மகிழ்கிறார்!

ஏகாதிபத்தியக் கற்றூணாக இருந்துவந்த பவநகர் மகாராஜா சென்னை அரசாங்கத்தின் தலைவராக வீற்றிருக்கச் செய்தது எவர்? அவரைத் தலைவராகக்கொண்டு ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்திருந்தது காங்கிரஸ் கட்சிதானே? என்றுவது நினைத்துப் பார்த்ததுண்டா, ஏகாதிபத்திய எடுபிடியாக இருந்த ஒரு மகாராஜாவை அரசாங்கத் தலைவராகக் கொண்ட ஒரு ஆட்சியில், பொறுப்பேற்று நடப்பது தம் கட்சியின் விடுதலை வரலாற்றுக்கு அவமானம் தேடுவதாகுமே என்று, காங்கிரஸ் கட்சியினர்?

ஏகாதிபத்தியத்திற்குத் துணைநின்ற ஒரு மகாராஜாவும் கூட, மக்கள்நலனில் அக்கரை காட்ட முடியும் என்று செயலளவில் ஒப்புக்கொண்டுள்ள நிதிஅமைச்சர், பி. டி. ராசன் அவர்களின் சேவைக்கு எந்த நாக்கைக் கொண்டு மாசு கற்பிக்க முன்வருகிறார் என்பதுதான் விளங்கிக்கொள்ள முடியாதப் புதிராக இருக்கிறது! ஏகாதிபத்திய இரும்புத் தூண்கள் எனக் காங்கிரஸ் கட்சியால் கேலி பேசப்பட்டு வந்த இராணுவப் படை வரிசையையும், ஊர்ப் பாதுகாப்பு அணிவரிசையையும், உயர்தர சிவிலியன் அதிகாரிகளையும் ஒழித்துக் கட்டாது ஒத்துக்கொண்டு, அவர்களின் போக்கில் பொதுமக்கள் குறை கண்டு கூறினல், அதை மறைத்து அவர்களின் சேவையைப் புகழ்ந்து கூறுவதையே பெரும் பேறாகக் கருதி, ஆட்சிபீடத்தில் அலங்காரமாக அமர்ந்திருக்கும் நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்களின் பிதற்றல், பொன்னம்பலத் தியாகராசன் அவர்களின் கால் கட்டை விரல் சிறு தூசையும் அசைக்க உதவாது!

# தென்னாட்டில் நிறுவப்பட்டுள்ள தொழிற்சாலைகளால் பலன் உண்டா?

## துணைத் தொழிலகங்கள் ஏற்படாவிட்டால் எவ்வித நலனும் காண இயலாது

தென் வட்டாரத் தொழில் வளர்ச்சிக்கு 'சலுகை' கிடைத்தால் வேலையின்மை ஒழிய வழி உண்டு

சென்னைத் தொழிலதிபர் தரும் விளக்கம்

'தென்னாட்டின் தொழில்துறை சக்தி' என்ற தலைப்பில் சென்னைத் தொழிலதிபர் எஸ். அனந்தராமகிருஷ்ணன் அவர்கள், பேசுகையில், தொழில் துறையில் திராவிடம் பன்மடங்கு பின் தங்கிக் கிடப்பதையும் மூலப்பொருட்கள் இப்பகுதியில் ஏராளமாக இருந்தும் அவைகள் புறக்கணிக்கப்பட்டதுடன், அலட்சியப்படுத்தப்படுவதையும் ஆட்சியாளருக்கு சுட்டிக்காட்டியதை முன் இதழ்களில் தந்துள்ளோம்; அவர் மேலும் கூறியுள்ளதையும் இங்கு தருகிறோம் :—

"கனரகத் தொழில்கள் நிறுவுவதைப் பொறுத்தவரையில் மத்திய சர்க்கார், விமானம் கட்டும் தொழிற்சாலை, தானே இயங்கும் டெலிபோன்களைத் தயாரிக்கும் தொழிற்சாலை, இயந்திர உறுப்புகள் தயாரிக்கும் தொழிற்சாலை ஆகியவற்றைப் பெங்களூரிலும், சென்னையில் இரயில் பெட்டித் தொழிற்சாலை ஒன்றும் ஏற்கனவே ஆரம்பித்திருக்கிறது. ஆனல் இத் தொழிற்சாலைகள் ஒவ்வொன்றும், தாங்கள் தயாரிக்கும் பொருட்களுக்குத் துணையான பிற பொருட்களையும் தயாரிக்க வேண்டுமென எதிர்பார்ப்பது கூடாது. இத் தொழிற்சாலைகளினல் வெற்றி கிடைக்க வேணுமானல், அத் தொழிலுக்குத் தேவையான துணைக் கருவிகளைத் தயாரிப்பதற்கென மட்டும் வேறு பலப்பல துணைத் தொழிற்சாலைகள் நிறுவப்பட வேண்டும். கனரகத் தொழில்களுக்குத் தேவையான எல்லாப் பொருட்களையும் ஒரே தொழிற்சாலையிலேயே தயாரிக்க வேண்டும் என்று திட்டமிடுவது பொருளாதார சிக்கனத்திற்கு அப்பாற்பட்டதும், வீண் விரயமுமேயாகும்.

"நிர்வாகத் துறையிலிருந்து பார்த்தால், முக்கியமான பொருட்களையெல்லாம் தானே தயாரித்துக் கொள்ள ஒரு தொழிற்சாலையால் முடியுமானல், மற்றும் சில சிறு பொருட்களையெல்லாம் வெளியிலிருந்தே வாங்கிக்கொள்ள முடியும். ஆனல், அத்தியாவசியமான விசேட உறுப்புகளையெல்லாம் வெளியிலிருந்துதான் வாங்க வேண்டியிருக்கிறது

"சென்னையில் இரண்டு மோட்டார் உற்பத்தித் தொழிற்சாலைகள் இருக்கின்றன. மேற்கேயுள்ள முன்னேற்றம் கண்டுள்ள நாடுகளிலெல்லாம், தங்களுக்குத் தேவையான பொருட்களில் 65 சதவிகிதத்திற்கு மேற்பட்ட பொருட்களை துணைத் தொழிற்சாலைகளிலிருந்தேதான் பெறுகின்றன. இந்தியாவின் மோட்டார் உற்பத்தித் தொழிலில் நியாயமான அபிவிருத்தி ஏற்படவேண்டுமென்றால், துணைத் தொழிற்சாலைகளைக் கண்டிப்பாக ஏற்படுத்த வேண்டும். தென் இந்தியாவில் இன்று இது போன்று ஒரு சில துணைத் தொழிற்சாலைகள்தான் இருக்கின்றன. என்றாலும், இன்னும் பல தொழிற்சாலைகள் நிறுவ வழிவகைகள் இருக்கத்தான் செய்கின்றன.

"இந்தியாவில் அதிக அளவில் சிமெண்டு உற்பத்தி செய்யப்படுகிறது என்றாலும் இப்போதையத் தொழிற்சாலைகள், நாட்டின் தேவையைப் பூர்த்தி செய்யக் கூடியவைகளாக இயங்கவில்லை. சிமெண்டுத் தொழிற்சாலைகளை நடத்துவதில் போதுமான அளவிற்கு அனுபவம் பெற்றுவிட்டிருக்கிறோம். எனவே, சிமெண்டுத் தொழிலை மேலும் விரிவுபடுத்துவதில் நமக்கொன்றும் கஷ்டம் இருக்காது. நல்ல தரத்தைச் சேர்ந்த சிமெண்டு உற்பத்தி செய்யத் தேவையான சுண்ணாம்புக் கல்லும், ஜிப்சமும் கிடைக்கும்போது அதை உபயோகித்து ஏன் சிமெண்டுத் தொழிற்சாலைகள் ஏற்படுத்த முடியாது என்ற பிரச்சினையை நன்றாகப் பரிசீலிக்கவேண்டும். ஏனெனில் இப்போது சிமெண்டுத் தேவை நாட்டில் வர வர அதிகமாகிக்கொண்டு வருவதுடன், தேவை பூர்த்தியடையாமலும் இருந்துவருகிறது.

"தென்னிந்தியாவில், இலாபம் தரக்கூடிய தொழில்களில் மண்பாண்டத் தொழிலும் ஒன்று. ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு இத்தொழிலால் பயன் கிடைக்காவிட்டாலும்கூட, திரு—கொச்சி மாநிலத்தின் பல பகுதிகளிலும், ஆந்திரப் பகுதிகளிலும் கிடைக்கிற களிமண்ணினல், மண்பாண்டத் தொழில்கள் ஏற்படுத்தப்பட்டால், சிறு ரகத் தொழில்களைப் போலவே அத்தொழிலும், தொழில் துறை விரிவுபடுத்தும் முயற்சிக்கு ஒத்துழைப்பதாக அமையும்.

"ஆண்டொன்றுக்குத் தென்னிந்தியாவிலிருந்து ரூ 20 கோடிக்கும் அதிகமான மதிப்புடைய தோல் சாமான்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. இந்தத் தோல் பதனிடும் வேலையை இங்குள்ளவர்கள் முற்றிலுமாகச் செய்து முடிக்காமல், தோலை வாங்குபவர்கள்தான் அந்த வேலையைச் செய்கின்றனர். இப்படிப்பட்ட வேலைகளை இங்கேயே செய்து முடித்து, செருப்புகள், பெட்டிகள் போன்ற நல்ல வேலைப்பாடமைந்த தோல் சாமான்களையும் இங்கேயே தயாரிக்கக்கூடிய தொழிற்சாலைகள் இங்கு நிறுவப்படவேண்டும் அப்படிச் செய்து, வெறும் கச்சாத் தோலை மட்டுமே நாம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதால் ஏற்படும் நஷ்டத்தைத் தவிர்க்க முடியும் என்பதுடன், அப்படிப்பட்ட தொழிற்சாலைகள் ஏற்பட்டால், பல ஆயிரம் தொழிலாளர்களுக்கும் வேலை வாய்ப்புகள் கிடைக்கும்.

"அப்படிப்பட்ட நிலை வளர—தொழில்களைப் பெருக்குவதற்கு, நியாயமான அளவில் வட்டிக்குப் பணம் கிடைக்க வசதி செய்து தரப்பட வேண்டும். 'இந்தியா ஸ்டேட் பாங்கு' இது விஷயத்தில் சில அபிவிருத்தி முறைகளை மேற்கொண்டு அதில் ஓரளவு அனுகூலம் ஏற்பட்டாலும்கூட, மற்றுமுள்ள தனிப்பட்ட பாங்குகளும் அவ்விதமாக நடந்துகொள்ள ஊக்கம் தரப்படவேண்டும்.

"தொழில்களுக்கு நீண்ட காலக் கடன் கொடுக்க, இந்தியாவிலுள்ள பாங்கர்கள் பின்தங்கியே வந்திருக்கிறார்கள். இந்த நிலை மாற்றப்பட வேண்டும். அந்நிலையை மாற்றித் தொழில் துறையில் மேலும் கடன் கொடுத்து உதவ சர்க்கார் பாங்கர்களுக்கு ஊக்கமளிக்க வேண்டும்."

# இமயச்சிகரத்தில் ஏற பிரிட்டிஷ் குழு முயற்சி

'பாஸ்பா' பள்ளத் தாக்கிலிருந்து, இமயச் சிகரங்களில் ஏற யார்க்ஷயரைச் சேர்ந்த சில மலையேறிகள் திட்டமிட்டிருக்கிறார்கள். டபிள்யு செனலி என்பாரின் தலைமையில், அவர்கள் 1957-ல் இந்தியாவுக்கு வருவார்கள். பிரிட்டனிலுள்ள பல மலையேறும் கழகங்களும், பல்கலைக் கழகங்களும், பிரபல சாக்லேட் தயாரிப்பாளர்களான ரௌண்ட்ரீ நிறுவனமும் உதவியளிக்க முன் வந்துள்ளன.

செனலி என்பவர், 1939-1947ம் ஆண்டுகளில் இந்திய சிவில் சர்வீசில் பணியாற்றியவர்; இமயப் பிரதேசங்களில் அனுபவமுள்ளவர் மேற்கு இமயத் தொடரிலுள்ள முக்கிய சிகரங்களை ஆராய்வதே இந்தக் குழுவின் நோக்கம். பின்னர், பார்வதி பள்ளத்தாக்குகளைக் கடந்த 'சினி கைலா' சிகரத்தில் ஏறவும் திட்டமிட்டிருக்கிறார்கள் இந்தச் சிகரம் 21,240 அடி உயரமுள்ளது.



# 'தம்மம்பட்டி துப்பாக்கிப் பிரயோகம் பற்றி பகிரங்க விசாரணை வேண்டும்'

சிறை மீண்ட ஆனையம்பட்டி தோழர்களின் வரவேற்பு பாராட்டுக் கூட்டத்தில் தீர்மானம்

பிப். 20—அத்தாலையொட்டி கைது செய்யப்பட்டு சிறைத்தண்டனையை ஏற்று, பின் விடுதலை அடைந்த தோழர்கள் இரா. மாரிமுத்து, சி. இராமுக்கோனர் ஆகியோரை பாராட்டுமுகத்தான் 28—3—56 இரவு 7 மணிக்கு, ஆனையம்பட்டி சாவடி மைதானத்தில் தோழர் இரா. சீனிவாசன் தலைமையில் ஓர் பாராட்டுக்கூட்டம் நடைபெற்றது.

சிறை சென்று திரும்பியத் தோழர்களைப் பாராட்டி தோழர்கள் ஏ. ஆனைமுத்து, பி. எம். இரங்கசாமி, டி. இராமச்சந்திரன், வி. வி. எஸ். சம்புலிங்கம், தெ. இரா. மாரியப்பா, கே. ஆர். சத்திய நாராயணன் ஆகியோர் பேசினர்.

இறுதியாக தோழர்கள் இரா. மாரிமுத்து, சி. இராமுக்கோனர் ஆகியோர் தம் நன்றியறிதலைத் தெரிவித்தனர்.

தம்மம்பட்டியில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தை விசாரணை செய்யவேண்டும் என்றும், குண்டடிபட்ட தோழர்களுக்கு ஏற்பட்ட சேதத்திற்கு நஷ்டஈடு தரவேண்டுமென்றும், தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தம்மம்பட்டி, முல்லைவாடி, கூடமலை, ஆனையாம்பட்டி, கெங்கவல்லி போன்ற கிராமங்களிலுள்ள பல கழகங்கள், மன்றங்கள் சார்பில் தோழர்களுக்கு மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டது. தோழர்களை ஊர்வலமாக அழைத்து வருகையில் பல்லாயிரக்கணக்கான பொதுமக்கள் கலந்துகொண்டு ஊர்வலத்தைச் சிறப்பித்தனர்.

# சமாதானப் பேச்சு வார்த்தைகள்

நிபந்தனையற்ற சரணகதிக்குப் பின்னர்தான் இயலுமாம்

சிங்கப்பூர், ஏப். 2—

சமாதானப் பேச்சுவார்த்தைகளுக்குத் தயாராக இருப்பதாக கம்யூனிஸ்டுகள் விடுத்த வேண்டுகோளை நிராகரிப்பதில் தாம் மகிழ்ச்சியுறுவதாகவும், எவ்வித மான நிபந்தனைகளும் இல்லாமல் கம்யூனிஸ்டுகள் சரணாகதி அடைந்தால்தான் தாம் அவர்களைச் சந்திக்க முடியும் என்றும் மலேயா முதலமைச்சர் தெங்கு அப்துல் ரெஹ்மான் கூறியிருக்கிறார்.

தம்முடைய சர்க்கார், உள்நாட்டுப் பாதுகாப்புத் துறையில் அதிகாரம் பெற்றபோது, தங்களுடைய ஆதிக்கத்தை விட்டுவிட வேண்டுமென்று பாலிங்கில் அவர்கள் செய்துள்ள வாக்குறுதியை மூடி மறைப்பதற்கு அவர்கள் செய்துவரும் ஒரு ஏமாற்று வேலையாகவே கம்யூனிஸ்டுத் தலைவரின் கடிதம் இருக்கிறதென்றும், கம்யூனிஸ்டுகள் சரணாகதி அடைய ஒப்புக்கொள்வார்களானல், எங்கு, எப்போது அவர்களுடைய ஆதிக்கத்தை விட்டுவிட வேண்டும் என்பதைக் கூறுவேன் என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## கோழிப் பண்ணையை அபிவிருத்தி செய்வராம்!

மத்திய சர்க்கார் கோரிக்கை — சென்னை சர்க்கார் இணக்கம்!

சென்னை, ஏப். 1—

கோழிப் பண்ணையை அபிவிருத்தி செய்ய வேண்டுமென மத்திய சர்க்கார் கேட்டுக்கொண்டிருந்ததையொட்டி, சென்னை சர்க்கார், மாநிலம் முழுவதிலுமாக 3 கோழி வளர்ப்புப் பண்ணைகள் ஏற்படுத்துவதென முடிவு செய்திருக்கிறது என்று கூறப்படுகிறது.

சென்னையிலுள்ள கோழிப் பண்ணை ஆராய்ச்சி நிலையத்தில் தற்போது இறக்குமதி செய்யப்பட்டிருக்கிற கோழிக் குஞ்சுகளைப் பராமரிக்க வேண்டும் என்பதே இதற்கான முக்கியக் காரணம் என்றும், கோழிப் பண்ணைகள் இல்லாத இடங்களில் அமைந்திருக்கிற கால்நடை மருத்துவ மனைகளில் அப்பண்ணைகளை அமைக்க வேண்டும் என்று மத்திய சர்க்கார் கேட்டுக் கொண்டதையொட்டியே அவைகள் அமைக்கப்பெறும் என்றும் கூறப்படுகிறது.

## நல்ல நிலைமையில் ஓடிக் கொண்டிருக்கிறதாம்!

சென்னை, ஏப். 2—

தற்பொழுது சென்னை சர்க்கார் போக்குவரத்து இலாகாவில் 302 பஸ்கள் எல்லாம் நல்ல நிலைமையில் ஓடிக்கொண்டிருப்பதாகவும், இன்னும் 100 'பஸ்'கள் அதிகமாக விடுவதற்குச் சர்க்கார் தீர்மானித்திருப்பதாகவும் அமைச்சர் பி. பரமேசுவரன் மேல்(சட்ட)சபையில் தெரிவித்துள்ளார்.

# கள்ளக்குறிச்சி சர்வ கட்சி கூட்டணி

வழக்கு நிதிபற்றி ஆராய்வு

28—3—56 இரவு 7 மணிக்கு தோழர் சி. சங்கரன் இல்லத்தில் தோழர் க. வேலாயுதம் தலைமையில் கள்ளக்குறிச்சி சர்வகட்சிக் கூட்டணி ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றபோது, 3—4—56-லிருந்து ஆரம்பமாகும் வழக்கு நிதிகளுக்கான வழிவகைகளை ஆராய்ந்து முடிவுகள் பல மேற்கொள்ளப்பட்டதுடன், தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

## பரிசுப் போட்டித் தடைச் சட்டம்

அமுலுக்கு வந்துவிட்டது

புது டில்லி, ஏப். 2—

பரிசுப் போட்டிக் கட்டுப்பாடுச் சட்டம் ஞாயிற்றுக்கிழமையிலிருந்து அமுலுக்கு வந்துவிட்டதாம்.

சென்ற ஆண்டு மக்கள்சபை நிறைவேற்றிய இச்சட்டத்தின்கீழ், பரிசுத் தொகை நிங்கள் ஒன்றுக்கு ரூ 1000-தான் வழங்கலாமென அதிகபட்ச வரம்பு விதிக்கப்பட்டுள்ளது.

# 10-ஆண்டுகளின் ஆராய்ச்சி பலன் தருகிறது

## மனிதர்களின் நோயைத் தடுக்க விஞ்ஞானிகள் முயற்சி

அம்மை குத்திய பசுக்கள் பால்மூலம் மகத்தானசாதனை?

வடக்கு மத்திய அமெரிக்காவிலுள்ள மினசொட்டா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த 17 விஞ்ஞானிகள் பத்து ஆண்டுகள் செய்த ஆராய்ச்சி, சில நோய்களைத் தடுப்பதற்குப் பால் பயன்படலாம் என்று வன்மையாய் காட்டுகிறது

பால் பண்ணை பசுக்களுக்கு தடுப்பு ஊசி குத்தி, கிருமிகளோடு போராடும் பொருட்களைப் பிறப்பிக்க அவற்றின் பாலுக்கு ஆற்றல் ஊட்டி, குறைந்தது 50 தொத்து நோய்களைத் தடுக்க முடியும் என்று அந்த விஞ்ஞானக் குழுவின் ஆராய்ச்சியால் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

மிருகங்களுக்கும், மனிதர்களுக்கும் உண்டாகும் நோய்களைத் தொடர்ந்து எதிர்ப்பதற்கு இவ்வாறு கண்டுபிடித்தது மிகவும் முக்கியமானது என்று கருதப்படுகிறது.

மிருகங்களின் பால் கொடுக்கும் காலம் கடந்தபின், பாலிலுள்ள கிருமி எதிர்ப்புப் பொருள்கள் தொத்து நோய்களைத் தடுக்க முடியாது என்று நெடுங்காலமாகக் கருதப்பட்டு வந்தது.

பத்தாண்டு நடந்து முற்றுப்பெற்ற ஆராய்ச்சி, இந்தக் கொள்கையைப் பொய்ப்பித்து விட்டது. எனவே, தடுப்பு ஊசி குத்தப்பட்ட பசுக்களின் பால் மூலமாய் மனிதர்களுக்கும், மிருகங்களுக்கும் தொத்து நோய்கள் பரவாத நிலை ஏற்படக்கூடுமென்று தோன்றுகிறது; அவ்வாறு ஏற்படுமேயானல், நோய்க்குப் பாதுகாப்பளிக்குமாறு மனிதர்களுக்கு அதிகமாகத் தடுப்பு ஊசி குத்த அவசியம் இராது.

இந்த ஆராய்ச்சி நடத்தியபோது விஞ்ஞானிகள், இறந்த கிருமிகளை பசுக்களின் மடியில் ஊசி மூலமாய்ச் செலுத்தினர்கள் மடியில், தடுப்பு ஊசி குத்துவதால், பாலின் தோற்றம் மாறுவதில்லை; அதன் உணவுச் சத்துக் குறைவதுமில்லை. ஆனல் அந்தப் பாலைக் குடிக்கிறவர்களது உடற்கூறு சிறு அம்மை, நிமோனியா, டிப்தீரியா, முதலிய பல நோய்களை எதிர்க்கும் வன்மை பெறுகிறது.

இதுவரை சோதனைகள் மிருகங்களை வைத்தே செய்யப்பட்டுள்ளன. எனினும், கண்டு பிடிக்கப்பட்டவை குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் பயன் விளைக்கும் என்று விஞ்ஞானிகள் நம்புகிறார்கள்.

எந்த நோயைத் தடுப்பதற்குப் பசுவுக்கு ஊசி குத்தப்பட்டதோ, அந்தப் பசுவின் பாலில் நாள்தோறும் கால்படி வீதம் நான்கு ஐந்து நாட்கள் குடித்தால், அந்த நோய் தடுக்கப்படும் என்று கூறப்படுகிறது. எனினும், பால் குடிப்பதை நிறுத்தி விட்டால், தடுக்கும் சக்தி இல்லாமற் போகும்.

மனிதருக்கு அது எவ்வளவு பயன்படும் என்பதற்கு விடை காணவும், இன்னும் பல நோய்களை எதிர்க்க அதனைப் பயன்படுத்தவும் இன்னும் ஆராய்ச்சி நடந்து கொண்டிருக்கிறது.

## பிலாய் உருக்கு ஆலைக்கு ரஷ்ய சாதனங்கள்

புதுடில்லி, ஏப். 2—

ரஷ்ய உதவியுடன் மத்தியப் பிரதேச சத்தியிலுள்ள பிலாயில் உருக்கு ஆலை துவக்குவதற்கு வேண்டிய சாதனங்கள் அனுப்புவதற்கான ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது

ரூ. 55 கோடி செலவில் இச் சாதனங்கள் கடனாக அனுப்பப் படுகின்றன. 12 ஆண்டுத் தவணைகளில் இக்கடன் தொகை திருப்பிக் கொடுக்கப்படுமாம்.

## குறைந்தபட்ச ஊதியத்தை நிர்ணயிக்க முயற்சி

புதுடில்லி, ஏப். 1—

குறைந்தபட்ச ஊதியத்தை நிர்ணயிக்க நிலையான ஒரு நிறுவனத்தை ஏற்படுத்துவதற்கென மக்கள் சபையில் ஒரு சட்டம் இயற்றப்படுமென்று எதிர்பார்க்கப் படுகிறதாம். இதற்காக 1948-ம் ஆண்டின் குறைந்த பட்ச சம்பளச் சட்டம் திருத்தப்படுமாம்.

'பிராவிடெண்ட்' நிதி சட்டத்திலுள்ள சில குறைகளைக் களைவதற்கும் ஒரு திருத்த மசோதா கொண்டுவரப்படுமாம்.

தொழிற்சாலைகள் என்ற விளக்கத்தின்கீழ் வராத மலைத்தோட்டங்கள், சுரங்கங்கள்; வணிக நிறுவனங்கள் போன்றவைகளுக்கும் சட்டத்தை விரிவுபடுத்துவது பற்றி யோசிக்கப்பட்டு வருகிறதாம்.

# பொதுச்செயலாளர் முன்னிலையில் 'தூக்கு மேடையில் கட்டபொம்மன்'

## மாணவர் இலக்கிய மன்ற ஆண்டு விழாவில் வரலாற்று நிகழ்ச்சிகள் பற்றி விளக்கம்

"மாணவர்கள் என்ற சொல்லுக்கு மாண்புடையவர்களாக—ஒழுக்கமுடையவர்களாக — பண்புடையவர்களாக இருத்தல் என்ற பொருள்படும். இத்தகைய சிறந்த பல ஒழுக்கங்களைப் பெற பயிற்சி அளிக்கும் நிலையமே, பள்ளிகளும் பல்கலைக் கழகங்களுமாகும்! மாணவப் பருவத்தில் ஒருவன் தன்னை நல்ல முறையில் போற்றத்தக்க விதத்தில் பண்படுத்திக் கொண்டால் அவன் பிற்காலத்தில் நல்ல பல அரிய செயல்களைச் சாதிக்கக்கூடும். எதிர்காலம் நல்ல முறையில் அமைய—நம் நாடும் உலக நாடுகளோடு ஒப்பிடும் நிலைபெற மாணவர்களாகிய நீங்கள் நல்ல முறையில் பயின்று மருத்துவர்களாகவும், விஞ்ஞானிகளாகவும், எஞ்சினியர்களாகவும், ஏனைய பெரும் பேறிஞர்களாகவும் ஆக வேண்டும்; அத்தகு நிலைபெற நீங்கள் உங்களைத் தயார் செய்து கொள்ளவேண்டும்.

"நாம் படித்துத் தெரிந்துக் கொண்ட சரித்திர நிகழ்ச்சிகள் எல்லாம், 'வந்தார்கள்; வென்றார்கள்!' என்றிருக்கிறதே தவிர, 'சென்றோம்; வென்றோம்' என்று வரலாற்று நிகழ்ச்சிகளில் இல்லை.

"பண்டைய வரலாற்று நினைவுக் கோட்டைகள்தான் கங்கை கொண்ட சோழபுரம், செயங்கொண்ட சோழபுரம் போன்றவைகள்,"

என்று, 29—3—56 மாலை சுமார் 6 மணியளவில், ஜெயங்கொண்டம் பள்ளி இலக்கிய மன்ற ஆண்டு விழாவில் தி. மு கழகப் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமை தாங்கிப் பேசுகையில் கூறினர்.

மாலை 5-30 மணிக்கு செயங்கொண்டம் வந்தடைந்த பொதுச் செயலாளரை பள்ளித் தலைமை ஆசிரியரும் ஏராளமான மாணவர்களும், ஆசிரியர்களும் இன்முகத்துடன் வரவேற்றனர்.

பொதுச்செயலாளர் இலக்கிய மன்ற ஆண்டு விழாவிற்குத் தலைமை வகித்து சிறப்புமிக்கதோர் சிந்தனைக் கருத்துக்களை மாணவரிடையே சொல்லி விளக்கி, அரியதோர் விளக்கவுரையாற்றினர்கள்.

சொற்பொழிவிற்குப் பின்னர், மாணவர்களால் 'தூக்கு மேடையில் கட்டபொம்மன்' என்ற நாடகம் நடித்துக் காட்டப்பெற்றது.

இறுதியாகப் பொதுச்செயலாளர் மாணவர்கட்குப் பரிசுகள் வழங்கினர்.

# வங்க - பீகார் இணைப்புக்கு எதிர்ப்பு

## 75 பேர் கைது; தலா ரூ. 5 அபராதம்

கல்கத்தா, ஏப். 2—

வங்க—பீகார் இணைப்பு எதிர்ப்பு கலவரங்கள் கல்கத்தாவில் மீண்டும் ஆரம்பமாயினவாம். கலவரங்களையொட்டி 75 பேரை போலீசார் கைது செய்து, தலா ரூ. 5 அபராதம் விதித்தனராம்.

முதலமைச்சர் பி. சி. ராயின் இல்லத்தின் முன்பு 52 பேர் கைது செய்யப்பட்டனராம்.

## பெரியகுளம் இளங்கோ மன்றம்

25—3—56-ல், மன்றத்தின் 2-வது ஆண்டு விழா, திரு. தணிகாசலம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் எம். கே. ஆறுமுகம், பாலு, தனம் ஆகியோர் இக்கால நாடகக் கலைப் பற்றி விளக்கவுரையாற்றினர்.

## தாளமுத்து - நடராசன் முன்னேற்ற மன்றம்

30—3—56 இரவு 9 மணிக்கு, தோழர் எம். கே. சாமி தலைமையில், வடசென்னை தாளமுத்து—நடராசன் முன்னேற்ற மன்ற நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்றபோது, தோழர்கள் இ அன்பாசந்தன் - செயலாளர்; மா. கனிச்சொல்லன் - துணைச் செயலாளர்; வி. எஸ். ஆனந்தன் - பொருளாளர்; எம். முனுசாமி - பொறுப்பாளராகவும், மற்றும் ஏழு பேர் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## சென்னை—7-வது வட்ட அழகிரி மன்றம்

சென்னை—பேசின்பிரிட்ஜ் அழகிரி மன்ற உறுப்பினர்கள் கூட்டத்தில், நிர்வாகிகளாகத் தோழர்கள் வே. வ. வேந்தன்—தலைவர்; ஜே. எஸ். இராசன்—செயலாளர்; கே. திராவிடமணி—துணைச் செயலாளர்; சி. குப்பன், எ. கருணாநிதி—பொருளாளர்களாகவும், 7 பேர் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## திருமணம்

15—3—56ல், மதுரை திண்டுக்கல் ரோடு, வடவலியார் சந்தில், தோழர் ஏ. கே. சண்முகராசா—தோழியர் எல். பத்மா வாழ்க்கை ஒப்பந்தம் (விதவை, கலப்பு மணம்) தோழர் டி. அழகர்சாமி தலைமையில் நடைபெற்றது. மணமக்களைப் பாராட்டி தோழர்கள் பலர் பேசினர். இத் திருமணத்தின் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 மணமக்கள் சார்பில் அன்பளிப்பாகத் தரப்பட்டது—பெற்றுக்கொண்டோம்—நன்றி—பொறுப்பாளர்.

## பாராட்டுக் கூட்டம்

14—3—56ல், மேலப்பாளையத்தில் நடைபெற்ற தோழர் இ. மு. அபுபக்கர்—தோழியர் ஆயிசாபீபி திருமணத்தையொட்டி, 19-3-56 மாலை தோழர் செ. கா மு. யூசுப் தலைமையில் ஓர் பாராட்டுக்கூட்டம் நடைபெற்றது. மணமக்களைப் பாராட்டி தோழர்கள் பலர் பேசினதும், மேலப்பாளையம் தி. மு. க. சார்பில் வாழ்த்திதழ் ஒன்று வாசித் தளிக்கப்பட்டது. மணமகன் மேலப்பாளைய தி. மு. கழக வளர்ச்சிக்கு ரூ 5 அன்பளிப்பாகத் தந்து நன்றியறிதலை தெரிவித்தார்.

## இரங்கற் கூட்டம்

13—3—56 காலை 8 மணியளவில், முத்தலிங்கம்பேட்டை — தோழர் இராமானுசம் அவர்களின் தந்தையார் சுப்பராயன் அவர்கள் 27—2—56ல் இயற்கையடைந்ததையொட்டி தோழர் கு. முருகையன் தலைமையில ஓர் இரங்கற் கூட்டம் நடைபெற்றது.

புதவை-இலாசுப்பேட்டை தி. மு க. செயலாளர் சி. ப. குருசாமி, தோழர்கள் பொ. குப்புசாமி, க. கோவிந்தராசு, க. அன்பரசன் ஆகியோர் பேசினர். இதன் நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கென ரூ. 1—8—0 அனுப்பப்பட்டது—வரப்பெற்றோம் —நன்றி— பொறுப்பாளர்.

# டெல்லிப் பெரிய மனிதர்களைச்...

[1-ம் பக்கத்தின் தொடர்ச்சி]

அதை நன்ருகச் செய்ய முடியும்.

"மொழிப் பற்றுக்கொள்வதில், அளவுமீறிச் செல்லுமாறு நான் கன்னட மக்களைத் தூண்டவில்லை என்பது வெளிப்படையானதே; என்ருவது ஒருநாள் கன்னட மக்கள் என்னைச் சரியாகப் புரிந்துகொள்வது நிச்சயம்.

"இப்போது சிலர் குழப்பமடையலாம்; கன்னடியர் ஒருவர் முதன் மந்திரியாயிருக்கிருர்; ஆனல், அவருக்கு, தான் ஒரு கன்னடியர் என்ற உணர்வு இருப்பதாகக் காணேம்.

"நாம் மேற்கொண்டிருப்பதுபோல, 'கன்னட மொழிக்கு ஆதரவு காட்டுபவராக அவர் இல்லையே' என்று எண்ணக்கூடும்.

"'லியர்' என்ற மன்னனின் மகளான 'கார்டெலியா' போல நான் இருப்பது உண்மைதான்.

"'கார்டெலியா,' தன் தந்தைக்குத் தகுந்த ஆலோசனை கூறுபவராக இருந்தாள். அந்த மன்னனின் வேறு இரண்டு பெண் மக்களும், மன்னனைச் சரமாரியாகப் புகழ்ந்து, தவருன வழியில் இட்டுச் சென்று, பின்னல் அவனுக்குத் துரோகம் இழைத்தனர். நான், 'கார்டெலியா' போல, கன்னட மக்களுக்கு நல்ல யோசனை கூறுபவனுக இருக்கிறேன்.

"கன்னட மக்கள், தாங்கள் பேசும் மொழி பற்றி அளவுக்கு மீறிய உற்சாகம்கொள்ள வேண்டாம்.

"கூட்டுத் தன்மையின் மகிழ்ச்சிக்குரிய பாரம்பரியத்தை கன்னட மக்கள் பின்பற்றி புதிய மாநிலத்தில் ஒருவருக்கொருவர் சோதர வாஞ்சையுடன் வாழவேண்டுமென விரும்புகிறேன்."

## பின்தங்கியபகுதிகளில் தொழில் துறை வசதி?

பழைய கொள்கைக்கும் புதிய கொள்கைக்கும்வேறுபாடு உண்டு?

புதுடில்லி, ஏப். 2—

சோஷலிச மாதிரி சமுதாய அமைப்புத் திட்டத்தின் நோக்கமும் போது, தனியார்களில் சமமான அபிவிருத்தியும் முக்கியமான குறிக்கோளாகக்கொண்டு, மத்திய திட்டக் குழு மாநில தொழில் கொள்கை குறித்து விவாதித்து வருவதாகத் தெரிகிறது.

இந்தக் கொள்கை, 1948-ல் மேற்கொள்ளப்பட்ட தொழில் கொள்கையை மாற்றியமைக்கும் வகையில் அமைந்திருக்கிறதெனவும் கூறப்படுகிறது.

இந்தத் திட்டப்படி, இதுவரையிலும் தொழில் துறையைப் பொறுத்தவரையில் பின் தங்கிக் கிடக்கிற பகுதிகளில் தேவையான அளவு தொழில் துறை வசதிகள் செய்துவருவது குறித்து முக்கியக் கவனம் செலுத்தப்படும்ம் என்று கூறப்பட்டிருக்கிறது.

மேலும் முக்கியமான எல்லா தொழில்களிலும் மத்திய சர்க்காருக்கே முழு அதிகாரமும், உரிமையும் வழங்கிவந்த 1948-ம் வருடத்திய அந்தக் கொள்கைக்கும் இப்போதைய புதுக்கொள்கைக்கும் பல வழிகளில் வேறுபாடுகள் உண்டு என்றும் தெரிகிறது.

இந்தக் கொள்கைப்படி, நாடு முழுமையிலுமுள்ள தொழில்கள் அனைத்தும், அந்தத் தொழில்களில் அந்தந்த மாநிலங்கள் கொண்டிருக்கும் பங்கை அடிப்படையாகக் கொண்டு, மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்படும்.

## கிணறு வெட்டுவதற்கு அளிக்கப்பட்ட உதவி

முயற்சிகள் மேற்கொள்ளாவிடில் கடும் நடவடிக்கையாம்

சென்னை, ஏப். 2—

கிணறுகள் வெட்டுவதற்காக விவசாயிகளுக்கு அளிக்கப்பட்ட முன்பண உதவியை, உதவித் தொகையாக மாற்றுவதற்கு தகுந்த நடவடிக்கை எடுத்து வருவதாகவும், விவசாயிகள் கிணறு வெட்ட எவ்வித முயற்சியும் எடுக்காவிடில், தான் கடுமையான நடவடிக்கை எடுத்து வருவதாகவும் சென்னை 'ரெவினியூ' அமைச்சர் மாணிக்கவலு சட்டசபையில் கூறியுள்ளார்.

## மீண்டும் அணு ஆயுத சோதனை நடைபெற்றது?

வாஷிங்டன், ஏப் 3—

ரஷ்யா அண்மையில் அணு ஆயுதங்கள் பற்றிய புதிய சோதனை நடத்தியதாக அமெரிக்க அணுசக்திக் குழு அறிவித்ததாகச் செய்திகள் கூறுகின்றன. ஆனல் நடத்தியது அணுகுண்டு சோதனையா, அல்லது நீர்வளிக்குண்டு சோதனையா என்பதைத் தெரிவிக்கவில்லையாம்.

## சிங்கப்பூர் சுதந்திரத் திட்டம்

அரசியல் கட்சிகளிடையே உடன்பாடு

சுதந்திரம் பெறுவதற்கான திட்டத்திற்கு, சிங்கப்பூர் அரசியல் கட்சிகளிடையே ஒரு உடன்பாடு ஏற்பட்டுவிட்டதாக முதன் மந்திரி டேவிட் மார்ஷல் தெரிவித்திருக்கிருர்.

'லண்டன் காலனி இலாகாவிற்கு, சுதந்திரத் தூதுக் குழு ஒன்று எதிர்க்கட்சியினருடன் சேர்ந்து தயாரிக்கும் அரசியல் சட்டதிட்டம் ஒன்றை அனுப்பி வைக்கும்' என்றும் மார்ஷல் பத்திரிகையாளரிடம் தெரிவித்திருக்கிருர்.

இந்தத் திங்களில், 13 பேரடங்கிய தூதுக் குழுவினருடன் டேவிட் மார்ஷல் லண்டன் செல்லவிருக்கிருர்.

## தமிழ் வளர்ச்சிக் கழகம்

பரிசுத் திட்டம்

"தமிழ் வளர்ச்சிக் கழகம் ஆண்டுதோறும் சிறந்த நூல்களுக்குப் பரிசும், பரிசுப் பத்திரமும், பாராட்டுப் பத்திரமும் வழங்கி வருகிறது; இப்பொழுது 10-வது பரிசுத் திட்டத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடைபெறுகின்றன அதற்கு 1954—55-ம் ஆண்டுகளில் வெளியான எல்லா நூல்களிலும் இரண்டு பிரதிகளை,—இதுவரையில் அனுப்பாதவர்கள்மட்டும் ஏப்ரல் மாதம் 15-ந் தேதிக்குள், 'காரியதரிசி, தமிழ் வளர்ச்சிக் கழகம், சர்வ கலாசாலைக் கட்டிடம் சேப்பாக்கம் சென்னை—5.' என்ற முகவரிக்கு அனுப்பவேண்டும்.

"மொழி பெயர்ப்பு நூல்கள் சாதாரணமாகப் பரிசுத் திட்டத்தில் இடம் பெறு. ஒரு தடவை பரிசுத் திட்டத்தில் சேர்ந்த நூல்கள் மறுபடியும் அதில் சேரா. ஆனல், அவற்றை மாற்றியோ அபிவிருத்தி செய்தோ மறு மதிப்பாகவோ வெளியிட்டால் அவற்றை அனுப்பலாம். இதுவரை பரிசுக்கு அனுப்பப்பெருத நூல்களின் புதிய பதிப்பு இப்பொழுது வெளியாகியிருந்தால் அவைகளும் பரிசீலனைக்கு எற்றுக்கொள்ளப்படும். தமிழ் நாடு அல்லாத வேறு மாகாணங்களிலும், இலங்கை முதலிய இடங்களிலும் வெளியான தமிழ் நூல்களும் பரிசீலனைக்கு எற்றுக் கொள்ளப்படும்." என்று, காரியதரிசிகள் கே சுவாமிநாதன், ம ப பெரியசாமித்தூரன் அறிவிக்கின்றனர்.

## 'தொல்லை' தரும் நாகர் எண்ணிக்கை

மக்கள் சபையில் பிரதமர் தகவல்

புதுடில்லி, ஏப். 3—

"நாகர் மலைகளில் 'பலாத்கார'ச் செயல்களில் ஈடுபட்டு 'தொல்லை'கள் தரும் நாகர்களின் எண்ணிக்கை சுமார் 1,500 பேர் இருக்கும்,"

என்று, அரசியலார் மதிப்பிடுவதாக பிரதம மந்திரி நேரு மக்கள் சபையில் தெரிவித்தாராம்.

தமக்குத் தெரிந்த வரையில் அவர்களிடம் சுமார் 500 துப்பாக்கிகளும், 6 'மெஷின் துப்பாக்கி'களும் இருக்கலாம் என்றும் அவர் கூறியுள்ளார்.

## ஆச்சாரியாரின் இழிகுணம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வகையான கூட்டு எண்ணம் இருந்துவருகிறது. மற்ற மாநிலங்களைப் போலல்லாமல் இதுவரையிலும் இம்மாநிலத்தவர், 'சென்னை, சென்னை வாழ்வோருக்கே' என்று கூறக் கேட்டதே கிடையாது. மாநில சர்க்காரும் கூட இந்த வழியைப் பின்பற்றினது இல்லைதான்."

பிப் 20-ல் நடைபெற்ற அர்த்தால் குறித்து அவர் பேசுகையில், அந்த அர்த்தாலை நடத்தத் திட்டமிட்டவர்களுடன் கலந்துரையாடி அர்த்தால் நடத்துவது நல்லதல்ல என்று கூறினதாகத் தெரிவித்துவிட்டு மேலும் அவர் தொடர்ந்தார் :—

"அந்த அர்த்தாலுக்குச் சர்க்காரும் ஆதரவு கொடுத்ததால் தான், அது வெற்றி பெற்றது என்று கூறுவது, நியாயமா? எவ்வளவுதான் மன வெறுப்பு இருந்தாலும் இப்படிப்பட்ட ஒரு விளக்கம் தரப்பட்டிருக்கக்கூடாது என்றே நான் விரும்புகிறேன்."

அடுத்தபடியாக அவர், சென்னை கீழ் சட்டசபையில் அமைச்சர் சுப்பிரமணியம், சட்டசபை உறுப்பினர் ஒருவர், பிரிட்டிஷார் ஆட்சிக் காலத்தில் நடந்துகொண்டதைக் குறிப்பிட்டுப் பேசி, 'வேறு எந்த நாட்டிலாவது இது போன்று ஒருவர் இருந்தால் அவரை விலக்கி வைத்திருப்பார்கள்' என்று குறிப்பிட்டது பற்றிப் பேசுகையில் கூறியதாவது :—

"மாற்று நாட்டின் அரசியல் ஆதிக்கத்தின்போது ஒருவர் செய்ததை, சுதந்திரம் பெற்று 10 ஆண்டுகளுக்குப் பிறகு கூறுவது இதுவே கடைசித் தடவையாக இருக்கவேண்டுமென விரும்புகிறேன். அவற்றையெல்லாம் மறக்காமலும், மன்னிக்காமலும் இருந்து மக்களையும் இந்தியக் குடிமக்கள் என்று கருதாமல் இருந்தால், இந்தப் பெரிய நாட்டில் ஒற்றுமை என்பதே இல்லாமல் போய்விட வழி ஏற்பட்டு விடும்."

"திரு-கொச்சி மாநிலத்தைச் சேர்ந்த காடுகளினுலும், ஆறுகளாலும் சென்னைக்கு எதிர்ப்புகள் ஏற்பட்டிருக்கின்றன. சென்னை மாநில மக்களின் ஆவலையும் பல இதழ்கள் எடுத்துக் கூறிவிட்டன. எனவே, இப்பிரச்சினைக்குப் பரிகாரம் வேண்டுமானல் சென்னை — திரு - கொச்சி மாநில இணைப்பு யோசனைதான் உதவி செய்யும். மேலும் தனக்குத்தானே நல்லதுமான இணைப்புத் திட்டம் மேற்கொள்ளப்பட வேண்டும். அந்த முறையில் நான் எந்த ஒரு இணைப்புத் திட்டத்தையும் வரவேற்கிறேன். நிலவி வருகிற நிலைமைகளில் காணப்படும் கஷ்டங்களையெல்லாம் நாம் மறந்து விடக்கூடாது. தங்களுக்கிடையே நட்பு முறை வளரவேண்டும் என்பதையோ, நல்லுணர்வே, இருக்கக்கூடாது என்பதற்காக இந்த இணைப்பு யோசனையை எதிர்க்காமல், இணைப்புத் திட்டத்தை இந்த நிலைமையில் மேற்கொள்ள முடியாது என்ற எண்ணத்தினல் தான் அது எதிர்க்கப்படுகிறது."

மண்டல மன்ற அமைப்பு பற்றி அவர் பேசினதாவது :—

"மசோதாவில் குறிப்பிடப்பட்டுள்ள மண்டல மன்றக் குழு அமைப்பு உண்மையிலேயே மிக நல்லதாகும். இந்தக் கருத்து பின்பற்றப்பட்டால், மாநிலப் பிரிவினையால் இழந்துவிட்ட சில விஷயங்கள் குறித்து மீண்டும் ஒரு நல்ல முடிவுக்குக் கொண்டுவர முடியும்."

இவ்வாறு, குறிப்பிட்ட அவர், தென்னிந்தியாவில் உள்ள ஏழு பல்கலைக் கழகத் துணைவேந்தர்களுடன் தாம் அவ்வப்போது நடத்திய பேச்சு வார்த்தைகளில் ஏற்பட்டுள்ள அனுகூலங்களைக் கருத்தில் கொண்டே, மண்டல மன்றக் குழு அமைப்புக்குத் தாம் அவ்வளவு ஆதரவு தருவதாகக் கூறியிருக்கிருர்.

## 'ஜேப்படி' சம்பவங்கள் குறைந்துள்ளதாம்!

சென்னை நகரில், 'ஜேப்படி'ச் சம்பவங்கள் குறைந்துள்ளது என்று சட்டசபையில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் நிதியமைச்சர் தெரிவித்துள்ளார்.

'ஜேப்படி'த் திருடர்களைப் பிடித்துப் பணம் பறிபோகும் சம்பவங்களை ஒடுக்க 'போலீஸ் கமிஷனர்' புதிய ஏற்பாடு ஒன்றை அமுலாக்கியுள்ளார் என்றும் அவர் அறிவித்துள்ளார்.

## 200 தோட்டத் தொழிலாளர்கள் உண்ணுவிரதம்

### அதிக போனஸ் கோரி போராட்டம்

நீலகிரியில் உள்ள பல்வேறு தோட்டங்களில் வேலை செய்யும் 200-க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் பட்டினிப்போர் தொடுத்திருக்கின்றனர் என்று தெரிய வருகிறது.

நிர்வாகத்தினர் 1955-ம் ஆண்டிற்கு, நிர்ணயித்துள்ள 'போனஸ்' விகிதத்தை உயர்த்தக் கோரியே தொழிலாளர்கள் 'உண்ணுவிரதம்' மேற்கொண்டிருப்பதாகத் தெரிய வருகிறது.

## டாக்டர் கான் சாகிப் பதவிக்கு ஆபத்து?

### 'லீகரே முதன் மந்திரியாக வேண்டும்'

மேற்கு பாகிஸ்தான் முஸ்லிம் லீக் தீர்மானம்

லாகூர், ஏப். 3—

"முஸ்லீம் லீக் கட்சியின் உறுப்பினர்தான் லீக் சர்க்காரின் முதன் மந்திரியாக வரவேண்டும்,"

என்று, மேற்கு பாகிஸ்தான் சட்டசபை முஸ்லீம் லீகர்கள் முடிவு எடுத்திருக்கின்றனர் என்று தெரிகிறது.

சட்டசபை முஸ்லீம் லீக் கட்சி, இந்த முடிவை, காரசாரமான விவாதத்திற்கு பின் மேற்கொண்டிருக்கிறது. தீர்மானத்திற்கு ஆதரவாக, 131 வாக்குகளும், எதிராக 70 வாக்குகளும் பதிவாகியதாகத் தெரிய வருகிறது.

சட்டசபையில், லீகர்கள் 245 - பேர் உள்ளனர்.

இந்த முடிவை ஒட்டி, லீகர் அல்லாத டாக்டர் கான்சாகிபை முதன் மந்திரியாகக் கொண்ட மந்திரி சபையில் எந்த ஒரு லீக் உறுப்பினரும் இருத்தலாகாது என்றும் முடிவாகியிருப்பதாகத் தெரிகிறது.

டாக்டர் கான் சாகிப், சட்டசபையில், தன்மீது நம்பிக்கைத் தீர்மானம் கொண்டுவருவார் என்றும் தெரிய வருகிறது.

## தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டம்

மதுரை மாவட்டத்திற்கும் விரிவாக்கப்படுமாம்

சென்னை, ஏப். 2—

தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டதலை இவ்வருட அக்டோபர் திங்களுக்குள்ளாக மதுரை மாவட்டத்திற்கும் விரிவுபடுத்துவதற்கு சென்னை சர்க்கார் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

தற்போது இந்தத் திட்டம் கோவை மாவட்டத்திலும், சென்னை மாவட்டத்திலும் அமுல் நடத்தப்பட்டு வருகிறது. இத்திட்டத்தின் பயன்களை கோவை மாவட்டத்தில் 40,000 தொழிலாளர்களும், சென்னை மாவட்டதில் சுமார் 53,000 தொழிலாளர்களும் அடைந்து வருகின்றனராம்!

## வேலை தேடித் தரும் நிறுவனம்

சென்னை சர்க்கார் ஏற்கும் காலவரம்பு நீடிப்பு

வேலை தேடித்தரும் நிறுவனத்தின் நிர்வாகத்தைச் சென்னை சர்க்கார் ஏற்று நடத்துவதற்கான காலவரம்பை அடுத்த ஜூன் 30-ந் தேதி வரை இந்தியப் பேரரசினர் நீடித்திருக்கின்றனராம். மார்ச்சு மாத இறுதிக்குள் இது நிறைவேறிவிடுமென்று முன்னர் எதிர்பார்க்கப்பட்டதென்றும், ஆனல், இதற்கான ஏற்பாடுகள் இன்னமும் நிறைவேறவில்லையென்றும் கூறப்படுகிறது.

## நெய்வேலி வேலைகள்

மத்திய அமைச்சர் பார்வையிடுவாராம்

புதுடில்லி, ஏப். 3—

நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டப் பகுதியின் தண்ணீர் இறைப்பு வேலையும், மற்றும் ஏனைய வேலைகளும் எவ்வளவு முன்னேற்றமடைந்துள்ளன என்பதைப் பார்வையிடும் பொருட்டு மத்திய சர்க்கார் உற்பத்தி இலாகா அமைச்சர் கே சி. ரெட்டி இம் மாதம் 8-ந் தேதி நெய்வேலிக்கு வருகிருராம்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் உப்பு தொழிலின் அபிவிருத்திக்காக சுமார் ரூ. 2 கோடி செலவிட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

இராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

